# பொருளட்டவணை.

# Introduction.

(BY MR. **N. Balasubramanya Mudaliar**. M.A., F.R.S.L.)

Of all the systems of philosophy born and nurtured in Southern India, the Saiva Siddhanta is the most important. DR. G. U. Pope, the learned translator of ST. Manikka Vachagar's *Tiruvachakam* and a critic who has conscientiously tried his very best to be fair and impartial, has after years of study, given it as his opinion that "the Saiva Siddhanta system itself is the choicest (pure South Indian) product of the Dravidian intellect". And almost nowhere else, in any Indian system of Theistic philosophy, do we find such sturdy independence of thought and freedom from the trammels of scholastic orthodoxy.

The fundamental doctrines of this philosophy are taught in the fourteen well-known Saiva Siddhanta treatises, the chiefest among which are the *Sivagnana Bodam* and *Sivagnana Siddhi*. All these Saivite text books are in difficult verse; and though, to help us to climb to the breezy mountain-tops of this philosophy, we have such master guides as the great Sivagnana Swamigal and others, they are too quick-footed and long-paced for us to follow with ease; and the result very often is that we are soon left leagues behind, and know not where we are. A good digest of the Saiva Siddhanta, which should not have omitted any essential part of it, was therefore very badly needed; and this long-felt want is now supplied by the small treatise to which these few lines of mine are prefixed. It is written in prose for the most part simple, and leaves out nothing important; and though here and there are a few hard passages, they are oysters worth-while opening, for they inclose many a pearl of rare beauty and lustre.

The author, MR. V. Karthikeya Pillai, seems to have spent almost a life-time in the pursuit of Siddhantic knowledge; and the present small work, written by him at the suggestion of his cousin MR. Proctor M. Subramaniam Pillai, has had the benefit of revision by an eminent Tamil pundit and Siddhanta scholar, MR. N. Kadiraivel Pillai. I need hardly say, therefore, that it richly deserves the kind and liberal patronage of the Tamil Saivite public.

N. BALASUBRAMANYAN.

சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.



இஃது.

சைவசித்தாந்த சந்தீவினிச் சபைக்

கௌரவ அக்கிராசனாதிபதி ஆகிய

நெ. பால சுப்பிரமணிய முதலியார் M. A. அவர்கள்

இயற்றியது.



எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*தைவரு மலைவீழ் தடங்கட லடிக்கட் டழுவுறும் பன்மணி யவற்றை*
*நைவரா தெடுத்திங் குலகுயிர்க் களிக்கு நயமென யார்க்குஞ்சே றரிதாஞ்*
*சைவசித் தாந்தப் பௌவமேற் புகுந்து தனித்தனிப் பொருளெலா மடுத்துக்*
*கைவரச் சைவ முடிபுச்சங் கிரகங் கழறின னிதற்குமா றுண்டோ.* (௧)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*அன்னவன்யா ரெனினந்தங் கதிரைவே ஞவலனுக் கடுத்த மாமன்*
*சொன்னயஞ்சேர் வல்லியப்ப வேட வத்துத் தோன்றன் மேற்கு*
*நன்னயமார் புலோலிநகர்ச் சித்தாந்த போதகனும் நலத்த வாழ்வோ*
*னின்னினிய வேள்கார்த்தி கேயப்பேர் பொலிந்திலகு மெம்மான் மாதோ.* ௨



இஃது.

ஆரணிநகர சமஸ்தான வித்துவானும்,

அத்துவித சித்தாந்த மதோத் தாரணரும்,

மாயாவாத துமச கோளரியும்

ஆகிய

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி

நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள்

இயற்றியது.



அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*செங்கைமான் புலியுரியுந் திறலரிகைம் மாவதளுஞ் சிறக்குங் கங்கை*
*மங்கையங்கி தேமதியொ டிங்களிவை யொன்றாக வைத்த நாதி*
*தங்குயிர்மலத் தொடுமெய் யறிவுமங்குத் தரிக்குமெனுந் தகைமை காட்டி*
*யெங்களையா ளுடையபரசிவன் கருணைத்திரத் துருவையெடுத் தானன்றே.* (௩)

வடமொழிக்க ணான்மறையும் வகுத்தருளிச் சிறப்பாக வன்மை சான்ற
மடமொழிக்கு மாகமங்க ளருளியவை தமிழ்மொழிக்கும் வகுப்பா னெண்ணிச்
சடமொழிக்குஞ் சிவகரணக் குரவருடன் சந்தானத் தலைவ ராகத்
திடமொழிக்கட் புகன்றன ஞான்மறையு மொருசித்தாந்தத் தெளிவுமாமே. (௨)

சுத்தவித்தை யாமெனவு மாகமங்க ளேலெழுன் சுருக்கம் யாமே
யெத்திறத்து முணர்வீரென் றொருபதினொன் கெனப்பொலிந்த வித்தநூல்கள்
பத்தியுடை யாருணர்தற் கரியவாய் விரிந்துகடற் பான்மைத் தாகிப்
பத்தியத்து மேலுரைக்கட் படுதலாற் றொகுத்தொருநூல் பதிக்க வெண்ணி.

கண்மணியா விளங்குமணி சைவநலப் பெரியமணி காக்கு நன்மைத்
தெண்மணியா வருக்குமணி வேந்தர்முடிக் குரியமணி யெனக்கு மாமத்
தண்மணியன் பழகுகுணங் கொடையிவையிற் சிறந்தமணி சகக்கு நல்ல
விண்மணிபோற் றிசைவிளங்கும் பிரதிவந்த சுப்ரமண்ய வேளுநங் கேட்ப. (௪)

சிவஞான போதவுரை சித்தியா ரைவருரை சேர்ந்த நம்மூர்த்
தவஞானப் ப்ரகாச தம்பிரா னுரைசதா சிவத்த ரூபம்
நவதசகா ரியஞ்சார வளிதருவப் பிரகாச நல்ல மேன்மைத்
துவநீல கண்டபா டியப்பெயர்ப்பின் நூலுரைக ளெங்கத் தேக்கி. (௫)

பொருட்டிணி புடனே மூன்று பொருளியல் புகன்ற கன்ம
மருட்டிறப் பெரிய மாயை சுத்தமோ டசுத்த மாயை
தெருட்சிவ ஞான முத்திச் செம்பொரு ளியல்க ளெல்லாம்
பருப்பொருட் டமைய வேறு பாவுரை யிவைகள் காட்டி. (௬)

மெய்யகத்துச் சித்தாந்த சங்கிரக மெனுமிந்நூன் மிளிரச் செய்தோன்
வையகத்தில் யாவனெனக் கேட்பரா லவன்பெருமை வகுப்ப மூன்று
செய்யகுவட் டொருதலமுங் கேதீசப் பெருந்தலமுஞ் சிறியேற் காக்கக்
கையினில்வே லெடுத்தபரன் பாடியாங் கதிரையுமிக் கணக்கா மூன்றும். (௭)

மூவகைய பொருள்காட்டு மிலங்கையின்யாழ்ப் பாணமதின் மொய்த்தநான்கு
பாவகைய பொருள்காட்டும் புலவரொலி மிகுமேலைப் புலோலி யூர்ப்பாற்
றேவகைய வேளாளத் திருக்குலமா நங்குலத்திற் றிருந்து சீர்த்தி
நாவகைய குகதாசன் முருகவேள் கோத்திரத்து நலக்க வந்தோன். (௮)

எற்கொருமா துலனாகி யிலங்குவோன் மாயாக்கை யென்னுங் கோயிற்
பொற்பினமர் பரம்பரன்மெய் யடியார்த மிடரகற்றிப் பொருந்தும் வாழ்வி
னிற்கவைக்கும் பிரணவநன் முகத்தானை நிறுவுளத்த னிமலன் கந்த
சிற்பரன்மெய்ப் புராணமது தேர்ந்திட்டோ னவனருளிற் சிறந்தோன் மாதோ.

வல்லி யப்பவே டவத்தினிற் பிறந்தவன் புலவர்கண் மதிப்போ
னல்லி யற்கையிற் சைவசித் தாந்தமா நவிபொரு ளறிந்தோன்
வெல்லி யற்கைச்சித் தாந்தமாக் கடலெனை விளம்பிட விருப்போன்
சொல்லி யற்படைக் கார்த்திகே யப்பெயர்த் தோன்றலா மன்றே.

## சிறப்புப் பாயிரம்.

இஃது

மகாவித்வான் மீனாட்சி சுந்தரப்பிள்ளை அவர்களின்

மாணாக்கரும்,

திருவாவடுதுறை யாதீனத்துச் சீடரும்,

தில்லைவிடங்கன் வித்வான் மாரிமுத்துப்பிள்ளை அவர்களின்

பௌத்திரரும் ஆகிய

**வெண்பாப்புலி தி-சு-வேலுசாமிப்பிள்ளை அவர்கள்**

இயற்றியது.

வித்தாந் தனிமுதலை மேவுநெறி காட்டுசைவ
சித்தாந்த சங்கிரகஞ் செய்தனனே—னத்திலங்கை
மேலைப் புலோலிவாழ் வேள்கார்த்தி கேயப்பேர்த்
நாலைப் புலவனவன் றான்.

திகழ்தரு சைவசித் தாந்த மதனைத் தெளிவுற வெவருநன் குணர்ந்தே
யிகழ்தரு பலபேரி சைத்திடு சமயத் திமிதரா தொருநன்னூல்வகுத்தா
னகழ்தரு முந்நீ ரகட்டினிற் கலம்போ லவிரும்யாழ்ப்பாணத்தி னொருபாற்
புகழ்தரு மேலைப் புலோலியா னுலகர் புகழ்கார்த்தி கேயநா வலனே.

இஃது

சென்னை அஷ்டாவதானம்,

**பூவை-கலியாணசுந்தர முதலியா ரவர்கள்**

இயற்றியது.

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நான்மறையோங் காரதா ரகத்தொளிர்நா யகமாக நாளு மேவு
நால்வாய னருட்கடலி னிற்றிளைத்த சுவானுபவ ஞான முன்னுத்
தான்முனைந்து மெய்கண்ட சாத்திரசு வாந்தநயஞ் சதுரிற் சூழத்
தனித்தனிமுப் பொருளுண்மை யின்றமைமை நனிதேர்ந்து தவருவக்கும்
வான்மகிழ்சுத் தாத்துவிதங் கரதலா மலகமென வழங்க வெண்ணி
வகுத்துச்சொற் றனன்சைவ சித்தாந்த சங்கிரகம் வசன யாகிப்
பான்மணியார் கலியாழ்ப்பாண மேலைப்புலோலிநற் பதியில் வாழும்
பழமைவே ளாண்குலத்து வருகார்த்தி கேசப்பேர்ப் பாவலோனே.

உ

சிவமயம்.

# உபோற்காதம்.



சித்தாந்தத் தேசிகன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
    செனன மொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
    மடுத்தானந்தம் பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
    மொழிந்திடவு முலகமெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
    பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிதுவென்ன பிராந்தி.

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந் தியிரும்பு பாணி யுப்பு
விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய வத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட மெய்கண்டதேவகுரு சரணம் போற்றி.

உலகின்கட் டோன்றி நிகழும் பலவகைச் சமய நூல்களுள் உண்மைப் பொருளை யுள்ளவா றுணர்த்தும் நூல்யாதென்று ஆராயுங்கால், கண்ணிலார் பலர் குழீஇக்கொண்டு வேழநின்றுழித் தங்கரத்தாற்றைவந்து கூறும் இலக்கணமெல்லாம், கண்ணுள்ளா னொருவன் கண்டு கூறும் இலக்கண மதனுள் ஒருபுடையமைந்து காணப்பட் டடங்குமாபோல, ஏனைச்சமய நூலாருந் தங்கடங்கள் சிற்றறிவுக்கு எட்டிய வாற்றானே அவ்வந் நூல்களிற் கூறிய பொருள்கள்யாவும் முற்றுணர் வுடைய முதல்வனாற் செய்யப்பட்ட அருமையுடையனவாய வேதம் ஆகமம் என்னும் இருநூல்களிலுங் கூறும் பொருளியல்புகளின் ஏகதேசமாகக் காணப்பட்டு அவற்றுள் அடங்கலின், அவ்விருவகை நூலுமே நூலெனப் படும்.

ஆகவே சமுத்திர கலச நியாயம் பற்றிச் சிற்றறிவுள்ள ஆன்மாக்கள் முற்றுணர் வின்மையிற் றம்புலம் போயவாறு எடுத்துச் செய்த வழிநூல், சார்பு நூல், பூருவ பக்கநூல் என்னு மிவை யிற்றிற்கு முதனூல்களாகிய வேதம் ஆகமம் என்னும் அந்நூல்களின் உண்மையும் அபேதமும் அறியாது, * உலோகாயதர், வைபாடிகர், மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர்

---

* உலோகாயதர் சார்வாகர் எனவுஞ் சொல்லப்படுவர். அவர் கொள்கை வேறுபாட்டானே பிருதிவிவாதி அப்புவாதி, தேயுவாதி, நாற்பூத வாதியாந் தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, பிராணான்ம வாதியென எழுவகைப் படுவர்.

ஆருகதர் என்னும் அறுவகைப் புறப்புறச்சமயிகளும் அவ்விரண்டனையும் நிந்திப்பர். தார்க்கிகர், ‡ மீமாஞ்சகர், மாயாவாதியர், சாங்கியர், பாதஞ்சலர் பாஞ்சராத்திரர் என்னும் புறச்சமயிகள் அறுவரும் அவ்விரு நூல்களுள் ஆகமத்தைப் பிரமாணமெனக் கொள்ளாது நிந்தித்து, வேதம் ஒன்றனையே பிரமாண மாகக் கொள்வர். அங்ஙனம் கொள்வா ராயினும் தார்க்கிகர் வேதப் பொருளொடு முரணிப் பொருட்டன்மை கொண்டும், மீமாஞ்சகர் வேதத்துட் கரும காண்டத்தையே கொண்டு, ஞான காண்ட மாகிய உபநிடதங்களை நிந்தித்தும், ஏகான்ம வாதிக ளாகிய மாயா வாதியர் ஞான காண்டத் தையே அங்கீகரித்துக் கரும காண்டத்தைக் கைவிட்டும், சிவாகமத்தை யிகழ்ந்தும், ஞானகாண்டக்கும் பூர்வாபர விரோதமாக மாறுபட்ட பொருள் விரித்தும் நிற்பர். ஏனைய சாங்கியர், பாதஞ்சலர், பாஞ்சராத்திரர் என்பாரும் அங்ஙனே வேதத்துட் டத்தமக் கியைந்த சிலபாகங்களை மாத்திரங் கொண்டு ஏனையவற்றை யொரீஇச் சிவாகமங்களையும் நிந்தித்து ஒழிவார். எனவே, இப்பன்னிருவருள் முன்னைய அறுவரும் வேத ஆகம நிந்தகரும், பின்னைய அறுவரும் வேதத்துள் ஒருபுடை யையும், சிவாகமம் முழுவதையும் நிந்திப்பவரும் ஆயினர்.

அகப்புறச் சமயிகள் ஆகிய பாசுபதர், மாவிரதர், காபாலர், வாமர், வைரவர், அயிக்கவாத சைவர் என்னும் அறுவரும் வேதத்துடன் சிவாகமத்தையும் பொதுப் பிரமாண மாகக் கொள்வார். ஆயினும், சிறப்புப் பிரமாணமாக மாயாருத்திரர், வித்தியா ருத்திரர், காலருத்திரர், சித்த புருடர், ஆதிபைரவர், மந்திரேசுரர் என்பாராற் செய்யப்பட்ட பாசுபதம், மாவிரதம், காபால முதலிய நூல்களைக் கோடலான் அவரும் அகப்புற மாயினர். இறுதிக்கணின்ற அகச்சமயிகள் ஆகிய சங்கிராந்த வாதசைவர், பாடாணவாத சைவர், அவிகார வாதசைவர், பரிணாம வாத சைவர், சுத்த சைவர், பேதவாத சைவர் என்னும் அறுவரும் வேதாகம மிரண்டனையுஞ் சிறப்புப் பிரமாணமாக அங்கீகரித்தா ராயினும் தன்னியல்பு பொது வியல்புகளிற் சிறிதுவேறுபாடு உள்ளாராகலின், அவரும் சித்தாந்த வுண்மை முற்றுங் காணாராயினர். இவ்வாறே மீண்டுரைக்கப் பட்ட சமயிகள் யாவரும் வேதாகமம் என்னு மிருநூலையும், அவற்றுள் ஒன்றனையும், ஒன்றன் பல பகுதியையும் வெறுத்தும் அவற்றுண்மை முற்றுங் காணாது உலைந்தும் மயங்கா நிற்கச், சுத்தாத்துவித,

† ஆருகதரும் ஆசீவகர், நிகண்ட வாதியென இருவகையர். இவற்றின் விரிவெல்லாம் சிவாக்கிரமணி தீபிகை, சித்தாந்தபோதம், பத்தாதிக்கிய சிகாமணி, சித்தாந்த சிகாமணி, தத்துவ நிசாநுசாரம், சிவஞான சித்தியார் என்னும் விரிந்த நூல்களிற் காண்க.

‡ மாயாவாதியர் ஏகான்ம வாதி, சுத்தப் பிரமவாதி, அவர்மத பிரமவாதி, பாற்கரியவாதி என நால்வகைப்படுவர். இங்ஙனம் நால்வேறு வகைப்பட்டாரும், சித்தாந்திகளால் உலகிற்கு முதற்காரணம் என்று கூறப்பட்ட மாமாயையா மதனையே பிரமமாக வைத்து வாதிப்பாராகலின் மாயாவாதியர் எனப்பட்டார். வித்தினின்றுந் தோன்றுந் தாமரையைப் பங்கயம், கஞ்சம் என்றற்போலவே மாயையிற் றோன்று முலகையு மிறைவன்வயிற் றோன்றுமென வொரோவழி வேதங் கூறிற்றென்னும் பயனறியாமையா லங்ஙன மிழுக்க முற்றார். சாங்கியரும் நிரீச்சுர சாங்கியர், சேசுர சாங்கியர் என இருவகைப் படுவர்.

சைவசித்தாந்தி பொருவனே அவ்விருநூல்களையும் பிரமாணமாகக்கொண்டு உண்மை யுணர்ந்து நிற்கும் என்க.

இவ்விரு நூல்களினும் அடங்காத பொருளாக ஒன்றனை யெடுத்துக் கொண்டு தஞ்சுதந்திரமாக வேறொருவரான் இயற்றப் பட்ட நூல் ஒன்றாயி னுமென்று மில்லை யென்றறிக. ஆகலால் வேதம் ஆகமம் என்பவற்றுள் எல் லாப் பொருள்களும் அடங்கி யுள்ளன வாகும். அவையிரண்டும் ஒரேதனி முதல்வனால் அருளப்பட்டன. அதனால் இரண்டும் வேறாகாது அபேதம் எ ன்றார் பெரியோர். அதனை,

வேதமொ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே.

எனனுந் திருமந்திரச் செய்யுளானும்,

வயந்து வேத சிவாகம யோரபேதம்,
நபச்சியாம வேதோபி சிவாகம:

(வேத சிவாமங் கட்குப் பேதங் காண்கின்றிலேம். வேதமே சிவாகமம்) என முழங்கிக் கூறியருளிய நீலகண்ட சிவாசாரிய சுவாமிகள் திருவா க்கானும்,

சிவஞானம் ச்வாச்ரிதாநாம் விமுக்தயே!
பசுபாசப் பதிஞானம் ஞானமித்யபி தீயதே!
சிவாகமோக்தம் யச்ஞானந்த தரஞான முச்யதே!
மமாகமார்த்த விஞ்ஞானம் நாங்யார்த்த வேதனம்!

என்னும் வேதோபப் பிருங்கண சுலோகத்தானும் பெறுதும்.

அற்றாயின் இரண்டு நூல்களை இறைவனியற்றற்கு ஏது வென் னெனில் வேதம் உலகர் பொருட்டும், சிவாகமங்கள்சிவசத்தி நிபாத முடையார் நிமித் தமும் அருளினன் என்ப. ஆகலின் வேதம் பொதுநூலும் சிவாகமம் சிறப்பு நூலுமாம். அந்த மிலின்பத் தழிவில் வீடாய இறைவன் றிருவடிப் பேற்றை யுடையும் இச்சையுடைய மன்பதைகள் யாவரும் சிவாகம வழியொழுகல் இன்றியமையா தாயிற்று. சிவாகம வழிக்கு மேலாய நன்னெறி யொன்றுமி ல்லை. அதுவே தீர்ந்த முடிபாகும். அதனால் அது சித்தாந்த மெனப்படும். சித்தாந்தம் என்பதற்குத் தீர்ந்த முடிபு என்பது பொருளாகும். அதனை "அ தசித்தாந்தம் த்ராணு மவதாரோ நிகத்யதே" என்னும் வேதவாக்கியத்தாற் கண்டு கொள்க. இத்துணை விசேட மமைந்த நான் மறைகளும் சிவாகமங்க ளும் தண்டமிழ் மொழியார்க்கு இன்மையாங் குறை நோக்கியே எல்லாஞான ம், எல்லா முதன்மை, எல்லா வநுக்கிரகமு முடைய பரசிவப் பெருமான், தமது நான்முகத்தி னின்றும் வேதங்களை யருளினாற் போல, அகிவாற் சிவ

பெருமானே யென்னுஞ் சமய குரவர் நால்வர் திருமுகத்தி னின்றும், நால்
வேதப் பொருள்களையும் அதிட்டான வாயிலால் தேவாரதிருவாசகங்களாக
வெளிப்படுத்தி யருளினார். அவை வேதப் பொருள்களுக்கு அணுத் துணை
யேனும் மாறுபடாது சிறத்தலால் திருவருணெறித் தமிழ்வேதம் என வழங்கி
ப் பாராயணஞ் செய்யப்பட்டு அந்தண பரிக்கிரகமு மாயின. அதுபற்றியே
தெய்வப் புலமை ஔவைப் பிராட்டியாரும், "தேவர் குறளுந் திருநான்
மறைமுடிவு - மூவர் தமிழு முனிமொழியுங் - கோவை, திருவா சகமுந்
திருமூலர் சொல்லு - மொருவா சகமென் றுணர்" என்று தெற்றெனத்
தெளித்தார்.

இங்ஙனம் தமிழ் வேதங்களை யருளிய பெருமான், சிவாகமங்களை யரு
ளுதற்கு முபாய நோக்கி, அவ்வாகமங்கள் பிரதிபாதிக்கும் நாற்பாதங் கட்கு
மியையவும், நால்வகைச் சத்திநிபாதம், நால்வகை முத்தி யென்பவற்றிற்கு
இயையவும், சமய குரவர் நால்வர் போலச் சந்தான குரவர் நால்வர் வயினின்
றும் ஆகம சாரங்களை யெல்லாம் சித்தாந்த சாத்திரங்களாக ஓதி யருளினார்.
அவை மெய் கண்டார் வழிநின்று வெளிப்படலால் மெய்கண்ட சாத்திரங்க
ள் எனப் பெயர் பெற்றன. அவையாவன;-திருவுந்தியார், திருக்களிற்றுப்
படியார், சிவஞான போதம், சிவஞானசித்தியார், இருபா விருபது, உண்மை
விளக்கம், சிவப்பிர காசம், திருவருட் பயன், போற்றிப் பஃறொடை, வினா
வெண்பா, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்
ப நிராகரணம் என்னும் பதினான்குமாம். இவை, ஆகமங்கள் இவ்விரண்டற்
கு ஒவ்வொன்றாக விளங்குவன வன்றி, வட மொழியிலே சுத்த வித்தைகள்
பதினான்கு பிரமாண மாக இருத்தல் போல, செந்தமிழினுந் தாமே சுத்
த வித்தைகள் பதினான் காகத் துலங்கு கின்றன. வடநூலார் அப்பதினான்
கையும் முக்கிய பிரமாண மாகக் கோடன் மான, இவை பதினான்கும் தா
ங்கா நல்லிசைத் தமிழோர் சுத்தவித்தைப் பிரமாண மென்று சிரமேல் வகிக்கு
ந் தரத்தனவாம்.

இனி ஆகமங்கட்கு உபாகமங்க ளிருத்தல் போல,இப்பதினான்கும் ஆக
மசாரமே யாயின் உபாகமம் வேண்டப்படு மன்றே யெனின், நன்கு கூறி
னை. இப்பதினான்கன் புடைநூலாகத் தசகாரியமுதலிய பண்டார சாத்திரங்
கள் பதினான்கு இருத்தல் கண்டிலைமக. ஆகவே வடமொழியில் ஆகம உபாக
மங்களிருத்தல் நேர, செந்தமிழினும் மெய்கண்ட சாத்திரங்க ளாகிய ஆக
மங்களும், பண்டார சாத்திரங்க ளாகிய உபாக மங்களும் இருத்தல் கண்
டார்,செந்தமிழ்த் தெய்வத்தைக் கீழா மதிப்பரேயோ? இங்ஙன முள்ள சித்
தாந்த சாத்திரங்கள் உயர்தனிச் செந்தமிழ் மொழிகளானே செய்யுள் நடை
யாகவும், உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுளான சம்பு நடை யாகவும்
யாக்கப்பட்டிருத்தலானும், அநுபவ நூலாகவும்,பரிபாஷை மொழிகளுளவா
கவும்விளங்கலானும்,உரை செய்வான் வந்த பண்டை யாசிரியர்க ளான மாத
வப் பெருந்தகை யாசிரிய வள்ளல் சிவஞான யோகியர், 'செந்தமிழ்ப் புலவர்

செறிநம் யாழ்ப்பாணத் நந்தயில் கலைக்கடன் மடுத்த ஞானப் பிரகாச சுவாமிகள், சிவாக்கிர யோகிகள், சுப்பிரமணிய தேசிகர், மறைஞான சம்பந்தர், நிரம்ப வழகிய தேசிகர், பாண்டிப் பெருமாள் பிள்ளை முதலாய நற்பேரறிவாளர் செய்தருளிய உரைகளும் விரிந்து நுணுகி யுணரற்குரித்தனவாகத் துலங்கலானும், பலர்க்கும் உணருந் தன்மை யில்லாமே கரையின்றி விளங்கும் பெருஞ் சமுத்திரம் போல இலங்கலானும், அவற்றை யெல்லாந் தொகுத்து ஒருநூல் தருக வென்று,

நம் மேலைப் புலோலி யென்னு மூதூர்க்கண் எம்பெருந் தவமெலாந் திரண்டு ஓருருவுற்று, அன்பென்பாக அருளுறுப்பாக, இன்பு குணனாக விளைந்து நிலவும் வேளாள குலதிலகராய், நந்தமக் கினிய மாதுலரா முரிமையும், இந் நூலார்க் கோருற்ற தோளும் விழியுமன்ன சகோதர வினமும் வாய்ந்து, நல்லார் யாவர்க்கு முண்மைக் கெழுதகைமை செறிந்த நட்பாளராய், பிரபு வாய், மன்னர் மன்னவரும் வந்து சன்மானிக்கும் சபை மணியாய், டிஸ்திறிக் நியாயதலப் பிரதி வக்தரென்னும் நியாய துரந்தரராய் விளங்கும் மகைஸ்வரிய மகௌதாரியரான ஸ்ரீமந் மு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் கேட்டுக்கொண்டபடி யிந் நூலாசிரியரு மீதியற்றுவா ராயினர்.

சித்தாந்த நூல்கள் யாவும் முப்பொரு ளாதி யியல்களை யெல்லாம் பொது நீக்கிச் சிறப்பியலிற் றெரித்தன வாயினும், பிரத்தியக்கம், அநுமானம், ஆகமம், சம்பவம், ஐதிகம், பாரிசேட முதலிய அளவை வாயிலாற் கூறிய மதிகொண் டுணரும் ஆற்றில், "அந்த மாதி யென்மனார் புலவர்" என்றாற்போல், சங்கார வுற்பத்தி வான்முறையிற் சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றிச் சுருங்க வகுத்தும், "நித்தமா யருவா யேக நிலையதாய்" என்று உய்த்துணர வைத்தல் என்னும் உத்திக் கேற்ப, நித்திய மென அநாதி யென்னும் பொருள்படப் பேசியும், அங்ஙனே யேனையவற்றையும் ஆங்காங்கு மறைத்துக் கிளந்தும் போகலால், அவை கொண்டு, பொருள் ஒன்றோ? இரண்டோ? மூன்றோ? நான்கோ? அவையினும் மேலவோ? ஒன்று மிரண்டுமோ? பலவோ? ஒன்றிரண்டற்றவோ? உள்ளதோ, இல்லதோ, உளதில்லதோ? இவையெலா மற்ற பாழாஞ் சூனியமோ? எனவும், அநாதியோ? அவாந்தராநாதியோ (பிரவாகாநாதி)? ஆதியோ? அவாந்தராதியோ? அருவமோ? உருவமோ? அருவுருவமோ? அவை யற்றவோ? குண குணியோ? காரண காரியமோ? விகார அவிகாரமோ? விம்பப் பிரதிவிம்பமோ? அம்சாம்சிகமோ? பரிணாமமோ? விருத்தியோ? ஆரம்பமோ? விவர்த்தமோ எனவுமின்னனவாய பற்பல சந்தேகங்கள் கொண்டு, இருட்பெருங் கடலில் யாமத்தே ஆர்ப்பரித் தெழுந்து குமுறி மோதா நின்ற பெருங் காற்றின் வழிப்பட்டு விம்மும் மரக்கலமாக்கள் போல, வருந்தும் அன்பாளர்த மையப்பாடெல்லா மொழிதற்கு இந்நூல் இன்றியமையாக் குரவன்போ லினிதொளிரு மென்க.

இந்நூல் பதார்த்த நிச்சயம், பதியிலக்கணம், பசுஇலக்கணம், மல இலக்கணம், கன்ம இலக்கணம், மாமாயை யிலக்கணம் என்னும் இவைகளுடனே

அசுத்தமாயை இலக்கணம், சிவ ஞான சாதன லக்கணம், முத்தி யிலக்கணம் என்னும் ஒன்பது பகுதிகளை யுடைத்து. இவ்வொன்பது பகுதிகளானும் சித்தாந்தப் பொருள்கள் பலவும் நிறுத்து விளக்கப்பட்டன. சிவஞான போத வுரை முதலிய ஆசிரிய வசனங்கள் ஆங்காங்கு எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. தருக்க நியாய ரீதியாக மேற்கோள்கள் நிறுவப் பட்டிருக்கின்றன. ஆயினும் வசனங்கள் முடிவுறாமே நீண்டு முடிதலும், அரிதுணர் பொருளனவாய திரிசொற்க ளகன்று பரந்து துறுமலு முடைமையாற், சிலர் அலமாப்பார் ஆவர். அதற் கேதுவு முரைத்து முடிப்பேமாக.

இந்நூல்செய்தார், தொல்காப்பியர்தி யிலக்கண நூலிற் பயில்விலராயினும், புலவொலி நனிவிளங்கலாற் புலோலியெனக் காரணப்பேர் பெற்றநம்பதிக்கண், ஆன்மாக்க ளெல்லா முய்ந்தருளத் திருக்கோயில் கொண் டெழுந்தருளியிருந்து, தம்மை நினையார்க்கு மாயத்தன்மை யாகிய மறக்கருணையை யியற்றுந் தும்பிக்கையை யுடைமையால் மாயக்கைப் பிள்ளையார் எனவும், முடிவி லாற்ற லுடைமையால் மாயாக்கை விநாயகர் எனவும், தூயவுடம் புடைமையால் மாயாதீதப் பதிப் பிள்ளையார் எனவும் காரணப் பெயருற்று விளங்கும் விநாயகப் பெருமானை யன்புடன் றொழுது, அவனருட்டுணையா லீது இயற்றின மென்றார். அங்ஙனேல் இவர் வயத்த தக்குறையாகாதென்க. எனவே யிந்நூலாரை யுணர்ந்தோர், மெய்கண்ட தேவர்க்கு வெண்ணெய் நல்லூர்ப்பொல்லாப் பிள்ளையார் உண்மை யிற் சித்தாந்த சிவஞான போதத்தை வெளிப்பட்டுணர்த்தி யருளினாற் போல, இவர்க்கும் உள்ளுணர்வி னின்று தெளித்தருளினரே யிதுகொலோ வென்றே கொள்ப. இதனை யாம் பரி சோதிக்குங்கால் ஆங்காங்கு விடயங்களைப் பொருத்தினம். காலம் வாய்க்காமையான் முற்றுஞ் செய்திலேம். விநாயகப் பெருமானின்னருட்டுணையா லீதியற்றப் பட்ட தென்ப வாகலின், சிலபாகங்களைத் திருத்தற்கு வெருவிட்டா மென்க. அடுத்த இரண்டாவது பதிப்பின் அவையெலாம் செவ்வனே அவ்விறை யருளான் வெளிப்படும் போலும்.

இந்நூல் வெளிவரற்காக வேண்டும் உதவிகள் பற்பல புரிந்த பேராதர முடையராய், இந்நூலார்க்கு ஆன்மார்த்த நண்பராய் விளங்கா நின்ற, சித்தாந்த பரிபாலன சீலரும், மேலைப் புலோலிச் சைவப் பிரகாச வித்தியாசாலை அதிபரும் ஆகிய ஸ்ரீமந் ஆ. ஆ. சிதம்பரப் பிள்ளை அவர்கள் செய்ந் நன்றி யென்றும் போற்றற்தக்க தொன்றேயாம். இந்நூலைப் பதிப்பிக்குங் காலத்து நஞ்சொற் றவறாமே சில உதவிகள் புரிந்த பூலோகநண்பன் என்னும் செந்தமிழ்ச் சித்தாந்தப் பத்திரிகையின் மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ ப. சுப்பிரமணிய முதலியார் நன்றியும் பாராட்டத் தக்கதே. சுபம்! சுபம்!!

இங்ஙனம்,

ஆரணிநகர சமஸ்தானம், }
சுபகிருது௵ தைமீ }

நா-கதிரைவேற் பிள்ளை.
ஆரணிநகர சமஸ்தான வித்வான்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவ சித்தாந்த சங்கிரகம்.

---

## காப்பு.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மெய்கண்டப் பெருந்தகைக்குச் சிவஞான மவன்றலந்தன்
　　மிளிரத் தேற்றிப்
பொய்கண்ட சமயமெலாம் போயொழியப் போதமது
　　புரிவித் தாற்போற்
செய்கண்ட பொருப்பர்செறி யடியனை வகுத்தலர்த்துஞ்
　　சிறக்க வேயிங்
கைகண்ட சித்தாந்த முணர்த்தியருண் மாயாக்கைக்
　　களிற்றை வைப்பாம்.

---

## கடவுள் வணக்கம்.

---

சுத்தாத்துவித சைவசித்தாந்த பரமஞானாசாரியர்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வடதருக்க ணெழுந்தருளிக் கடந்தசைவ சித்தாந்த
　　வண்மை காட்டித்
திடமுறுக்கு பெருந்தகைமைப் பரமகுருவாய் வேதமதிற்
　　சிறக்கு மொன்றாய்
மடமுருக்கிப் பதிஞானத் துயிர்தனது திருவடியின்
　　மன்னி வாழத்
தடமுறைகை யுறையவைத்த தக்கிண மூர்த்திசரண்
　　டலைமேற் கொள்வாம்.

## சுப்பிரமணியப் பெருமான்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

யாவ னொருவ னென்றேயத் திலங்கும் புருச்சசந் நிதியுறைவான்
யாவ னொருவன் சிவகுருவி னிலங்கித் தோன்றுங் குகன்யாவன்
யாவ னொருவன் கலைப்புலவன் யாவன் சைவ முதலாகுந்
தேவ னவன்றன் பதமலர்க்குச் சிறியேன் வணக்கஞ் செய்கின்றேன்.

## சந்தானாசாரியர்.

கலி விருத்தம்.

வேத நால்வர் விரித்திடன் மானவே
நாத வாகம நற்பொரு ளுல்வரா
யோத வந்தரு ளுண்மைகண் டான்முத
னீத நால்வர் நிழற்பதஞ் சார்குவாம். (௩)

# அவை யடக்கம்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பாவானு முரையானுந் திருவருள்பெற் றிடும்புலவர்
பகர்ந்த வித்தைத்
தேவாதி தேவனுமோர் குறியிற்காட் டிடுமிதனைச்
சிறியேன் கல்லா
வோவாத போதத்தா லுரைக்கவர லென்னென்னே
யொன்றே நாண
மாவாவோ வென்செய்கே னென்றனக்கே பெருநகைகளை
யாக்கு மாதோ. (க)

ஆயினுமோர் பெருவிருப்பெ னுள்ளகலா தலைத்தலைத்துப்
பிடரி ளுட்டப்
பேயனிவன் றெரிந்தவற்றைச் சுருக்கியிலை யவருணரப்
பெட்பிற் செய்தேன்
றூயைநேர் புலவரனம் பால்பிரித்துண் டகைமை யெனத்
தகுதி கொண்டு
சேயைநே ரிதைமதித்துத் தேர்வர்சைவ சித்தாந்தத்
தீம்பா லென்றே. (உ)

முதலாவது

# பதார்த்த நிச்சயம்.

அநாதிமல முத்த பரமபதி யாகிய சிவபெருமானாலே அநாதியே யருளிச் செய்யப்பட்ட வேதாகம மென்னும் முதனூல்களும், அவற்றின் வழிநூல் சார்பு நூல்களாகிய யாவும் வஸ்து நிச்சயம் பேசு மிடத்து,சிவம்,ஆன்மா,மலம் என அநாதி பதார்த்தங்கள் மூன்றுள வெனவும், அவைகளை யுணர்ந்து நிச்சயிக்குந் திறமான அனுமானமுதலிய பிரமாணங்களையும்,அவைகளுட் சாதன கருத்தனாகிய ஆன்மாவின் சாதன முறைகளையும், அவற்றின் பயனாகிய சிவப்பேற்றையுங் கூறி முடிக்கக் காண்கின்றேம்.

இவைகளுள், சிவம் தன் சார்பினதாகிய ஆன்மாவைத் தனக்கடிமையாகவும், அதனறியாமையை உடைமை யாகவுங் கொண்டருளும்.இவை மூன்றுமே அநாதி நித்தியபதார்த்தங்களாகக் காணப்பட்டன. அந்நிலைப்படியே அம் முப்பொருள்களும் முத்திக் காலத்தும் அழியாது நித்தியமாயிருக்கும். இனி அநாதியென்னும் பதம் நித்தியமேயாக,ஆதியென்னும் பதம் தோன்றி யழிதலை யுடையதாம். இவ்வாறுகலால் மலம், கன்மம், மாயை யென்னும் மும்மலங்களுடன் அவைகளைக் காரியப்படுத்தும் மாமாயை திரோதாயி யென்னு மிருமலமுஞ் சேர்ந்த வைம்மலங்களுடா அவைகளைப் பிரேரிக்கும்பஞ்சகிருத்தியங்களும் மூவகை யான்மாக்களுமாகிய விவைகளை யெல்லாஞ் சிவாகம சித்தாந்த நூல்களில்,அநாதி நித்திய வஸ்துக்களெனக் கூறியதாக வுணர்ந்து “ வல்லி மலகன்ம மன்றுளவா” மென்னும் மெய்கண்ட சுருதி வாக்கையும், “ ஏக னநேக னிருள்கரும மாயையிரண்டாக விவையாறநாதியில்” என்னுந் திருவருட்பயன் வாக்கை யுங் கொண்டு சித்தாந்த நூல்களிற் பயிலும், ஏகதேச வுணர்வைக்கொண்ட நம்போலிய சீவர்களிற் சிலர், அநாதி ஆதியாகிய காரண காரியங்களைப் பகுத்துணர்தற்கு ஐயவிபரீத மயககங்களிருத்தலாற் றெளியாது மயக்க முறுகின்றனர். அவற்றை யாராய்ந்து சமாதானத் தெளிவடைதல் அவசியமாகும்.இம்மலங்களி லொன்றாய் முன்வந்த கன்மம் அநாதியே கேவல மூடத்திற் கிடந்த சீவர்கள் தம்முயிர்த்துணையாகிய சிவத்தை மறந்து மலத்தைப் பற்றிய குற்றமென்னுமோர் சம்பாத்தியமுண்மைபற்றி, அம்முறையினால் இக்கன்மம் காரியமெனப்படும்.இதன் காரியமான நல்வினை தீவினை யென்னும் இருவினைகளை

வன் கையில் வேர்வை யோடு சேர்ந்த புழுதியினாலும், பசையிடுதலி னாலும், அதனை உடுத்தவரின் வேர்வையோடு சேர்ந்த புழுதி, சாணி முதலியவைகளினாலுமே அழுக்குப் பற்றியதால் அச்செயற்கை யால் வந்த அழுக்கை நீக்கித் தன்னியற்கை யாகிய வெண்மையைக் கொடுக்க வல்லனாகிய ஓர் ஏகாலியானவன், அவ்வழுக்கைக் கழற் றுங்கருவியான உவர்மண் சாணி யென்னும் அழுக்குப் பொருள்க ளோடு அப்புடைவையைச்செறியச் சேர்த்து வைத்து அதிற்பற்றிய வழுக்கு முழுவதையுங் கழற்றி, இயற்கையிற் சுத்த வெண்மையதா க்கினாற்போல, அநாதியே சீவர்களைப் பற்றிய ஆணவமலத்தை அக ற்றவல்ல மல வைத்தியனாகிய சிவன் அந்நோயைத் தீர்த்தற்கு அம் மலதடத்த நிலையின் திரிபாய் வைப்புச் சரக்காக வெடுத்துக்கொ ண்ட விம்மாயையை முதற் காரணமாக வைத்து, அதன் காரியமாகிய தனு கரண புவன போகங்களாய ஔடதமான மாயேய மலத் தால் மூலமல வழுக்கைக் கழுவி, அப்பக்கு வான்மாக் கட்குச் சனன மரண வேதுவான கன்ம சேடமின்மையால் அம்மாயை மாயேயங் கள் அந்நோய் நீங்கிய வழி ஔடதமும் உடன் சமித்தழிதல் போல வேரோடு இல்லையா யழிதலரில், அவரை அருளவத்தை யாகிய சுத்த நிலையில் வைத்துப் பக்குவமாக்கிச் சிவமாந் தன்மைப் பெருவாழ் வைக் கொடுப்பன். ஆதலால், இம்மாயையும் கன்ம போக வேதுவாய் இடையிலே சிவனாற் கொடுக்கப்பட்டு, அப்போக முடிவின் இடையி லே யழிக்கப்படும் காரியப் பிரபஞ்சமே யாகுமென்பது சந்தேக விபரீத மின்றித் தெளிந்தறியத்தக்க சற்காரிய சித்தாந்தமேயாகும். இதற்குப் பிரமாணம் "எழுமுடல் கரணமாதி யிவைமல மல மலத் தாற்-கழுவுவ னென்று சொன்ன காரண மென்னை யென்னிற்-செழு நவை யறுவை சாணி யுவர்செறி வித்தழுக்கை-முழுவதுங் கழிப்பன் மாயை கொடுமல மொழிப்பன் முன்னோன்" எனவும், "அநாதி மலங் க ளிம்மருந்தாற் றீர்த்துப்-பரகதி யதுவுந் தந்து பாதபங்கயமுஞ்சூ ட்டும்" எனவும் "எல்லாஞ் சாலவின் றுருமான்மாச் சிவத்தினைச் சா ர்ந்தபோது எனவுங் கூறியபடி இவ்விருவகைப் பிரபஞ்சங்களும் ஆன்மாச் சிவத்தினைச்சார்தற்கு ஏதுவாகிய பக்குவ காலஞ்சானுதற் பொருட்டு இப்பெத்த காலத் துளவாவன வென்பதாம். அத்தனுகர ணாதிகள் மல கன்மங்களாகிய நோய்க்கு மருந்தாக வவனாலமைக்க ப்பட்டன எனவும், சூலம், மான், மோகினி, விந்து முதலிய விவைக ளெல்லாம் பாசத்தை அரிக்கும் அரனுக்குப் பரிக்கிரக விபூதியாதல் கூறப்பட்டதெனவும், தன்னை மலமன்ற ணைத ருன்,, என்பது மா

யை கன்மங்கள் போல ஆதியன் றெனக் காலத்தானும் வேற்றுமை கூறுவார் அன்றணைதல் என்றுரெனவும், ஆகந்துக மலங்களின் நீக்குதற்கு சகசமலமென விசேடிக்கப்பட்டது எனவுங் கூறிய ஆசிரிய திருவாக்குப் பிரமாணங்களால் ஆணவமல மொன்றே யநாதி நித்திய வஸ்துவாயும், மாயை கன்மங்கள் இடையிலே பற்றி இடையிலே நீங்குவனவாயும் வேறு பிரித்துக் கூறியிருக்கின்றார். ஆகலால் சிவன் பஞ்ச கிருத்திய வாரம்ப வாதி காலத்திற் பிரபஞ்ச காரணமீா யெடுத்துக் கொண்ட பரிக்கிரக சத்தியாதலில் அக்கிருத்திய விடுதலைப்பட்ட சீவர்களில் இல்லையா யழிபொருளாகு மென்பது திடசித்தமாய்த் தெளிந் துணரத்தக்க சித்தாந்த மாகும்.

இனி ஒருவாறு ஆசிரியர் "நித்தமா யருவாயேக நிலையதா" வெனக் கூறினமையால், இம்மாயை தோன்றி யழியுங் காரியப் பொருளாகா தெனச் சந்தேகம் நிகழின், அதனை யுற்றுச் சிந்தித்து நோக்குமிடத்து, மலவைத்திய பஞ்ச கிருத்திய வுற்பத்தி சங்காரம் எப்போதும் வேண்டப் படுதலினால் நித்திய மென்னும் உபசாரத்தைப் பெற்றதே யாயினும் ஒவ்வோ ரான்மாவையும் பற்றுதற்கும் விடுதற்கும் முதலையும் முடிவையும் பெற்ற காரிய வழிபொருளேயாய், உற்பத்தி காலத்திற் றோன்றிச் சங்கார காலத்தி லழிதலால் சொரூப நிலைக் காரணப் பொருளாகாது, எவ்வாற்றானும் காரியவழிபொருளாகவே நிச்சயித் துணரலாம். இதுவுமன்றி இப்பிரபஞ்ச காரியங்களை ஒவ்வோர் காரியத்துக் குவமையாகக் கூறிய இந்திரசாலம் கனவு பேய்த்தேர் முதலியவைகளில், இந்திரசாலம் முன்னில்லாத வொன்றை வருவித்தற்கும், கனவு இடையேநிகழ்ந்து மறைந்து போதற்கும், பேய்த்தேர் கடும்பகலில் வெய்யிற் கடுமைபற்றித் தோன்றி, அவ்வெய்யில் மேகபடலத்தால் மறையுண்ண வழிந்து போதற்கு முவமையாக இம்மாயை மலபரிபாகம் வந்த சமயமே அருளாகிய மேகபடலத்தா லழிந்து போனதாக வுவமித் திருப்பதாலும், இன்னும் விவர்த்த மாயாவாத சமயிகள் கிளிஞ்சிலை வெள்ளியென ஆரோபிக்குமவர் போல இப்பிரபஞ்சத்தை மெய்யெனக் கருதுவா ரென்னு முவமையாலும், காரியப்பொருளாகிய இப்பிரபஞ்சம் காரண மெய்ப் பொருளாகிய அநாதிப்பொருள்களின் நித்தியகாரணத்தின் ஒன்றுகாதென்பது தருக்க நியாய முகத்தா னுணர்ந்து, உமாபதிசிவாசாரியர் "ஏகனநேகனிருள் கருமம் மாயை யிரண்" டென்னும் ஆறுபொருள்களும் சிருட்டியாரம்ப ஆதிகாலத்திலே யுள்ளனவென்பதை நம்போலிய சீவர்களுக் கறிவித்தலே தமதுள்ளக் கருத்தா

கக் கூறியவச்செய்யுளின் பொருளை, சிவன் தன்வாக்கினாற் கூறிய வேதமொன்றே சித்தாந்த சற்காரியப் பொருளா யிருக்கவும், அவ் வுண்மைப் பொருளை யுணர்ந்தெடுக்க வழியாது வேறுவேறு பூருவ பக்க சமயங்களாய்ப் பொருள் கொள்ளுதல் போல,இந்த ஆறுபொ ருளையும் அநாதி நித்தியமாகப் பொருள் கொள்ளுவாராயின், அவ் வாசிரியர் வேறுவேறு தனித்தனி ஆதியெனவும், அநாதியெனவுங் கூறிய வசனங்களிற் சமாதானப் பொருள் எடுத்தல் அருமை யாத லால், சிவன் பஞ்ச கிருத்திய வாதியில் எடுத்துக்கொண்ட பரிக்கிர கமான இம்மாயை, இச்சீவர்களின் கன்மானுபவம் முடிந்து பக்கு வப்படும் வரையில், எடுக்குஞ் சனனங்கடோறும் நீரோட்டம் போ லவிடாது தொடர்ந்து தனுகரண புவனமுதற் காரணமாக நிற்கும் உரிமை யொன்றளவில் பிரவாகா நாதி யாகுமென வுள்ளக் கிடையி ல் வைத்துக் கூறினாரெனப் பொருள் கொள்ளுதலே சற்காரியார்த் த மாகுமென என்சிற்றறிவிற் படுகின்றது. அதனைச் சிவஞானவுண ர்வுடையோர் சிந்தித்துணருவார். அவரே எனக்கு முணர்த்துவார்.

இனிமாபாயைபாவது பரமானந்த சொருபநிலையி னின்றசிவம் அநாதி ஆன்மாவின் கேவல மூடத்தை நீக்கி தன்னியற்கை வியாப கத்தோடு தாமாந் தன்மைப் பெருவாழ்வைக் கொடுக்குங் கருணை யால் பஞ்ச கிருத்தியத் திருவுளங் கொண்ட வவதரம் தன்னருளி ன் சட சத்தியான சிதாகாச பிரபஞ்ச மூல தாரக பரிக்கிரக சத்தி யைத் தனதருளாற் கற்பித்து, அதன்மூலமாக உருவாதி தொழில்க ளை யியற்றுதலால் அவ்வுயிர்களைத் தூய்மைப்படுத்திக் கன்மானுபவ முடிவில் மலசங்காரமான முத்திக் காலத்திலே பிணமெரிந்து சாம் பரான முடிவிலே அப்பிணஞ் சுடுகோலையு மதனோடுகூட நீக்கி விடு தல்போல, அம்மலகாரிய பாயாபிரேரகமான இம்மாமாயையும் சிவ னது தடத்தநிலைக் குரித்தாய், படங் குடிலானாற் போல விரிந்தொ டுங்கும் பொருளாதலால் இதனையும் உற்பத்தி காலத்தில் விரித்துச் சங்காரகாலத் தொடுக்கி விடுவார். ஆதலால், மாமாயை யானது கார ண வஸ்துக்கள் மூன்றனுள் ஒன்றாய சிவத்தின் அபேதமான சிற்சத் தியின் காரியப்பொருளாகக்கொள்வதே சித்தாந்தமாகும்.

இனித் திரோதாயி யாவது, அச்சிவபெருமானது திருவருளே. அது தடத்தநிலையிற் பிரிந்த பஞ்சசத்தியி னொன்றாய், ஆன்மாவின் ஞானக் கிரியைகளை மறைத்த ஆணவத்தை யொருபுடை யொதுக்கி அறிவு செயல்களை விளக்கிக் கன்மத்தை நுகர்வித்து மலபரி பாகம் பண்ணும் பஞ்ச கிருத்திய சிவசத்தி யேயாம், அக்கன்ம போகத்தில்

ருசிப்பித்து மலமறைப்போடு தானும் மயக்குதலால் இதுவும் ஓர்ம லமாக வுபசரித்துப் பேசப்பட்டது. அக்கன்ம போகமுடிக்கு இருவினை யொத்த மலபரிபாக சமயத்தில் தனது மறைப்பை விடுத்து அவ்வப்பொருள்களின் உண்மையை யுள்ள படிகாட்டும் ஒளியினையுடைய வருளாகி யுணரக் காட்டுதலால் உற்பத்தி காலத்திற் றோன்றிச் சங்காரகாலத் தொடுங்குங் காரியப்பொருளாகக் கொள்வதே சித்தாந்தமாகும்.

இனி, பஞ்சகிருத்தியமாவது, சிவன் தனது சொரூபநிலை யினின்று தடத்த நிலையாகிய உருவ நாமங்கொண்டு செய்யுங் கிருத்தியமாதலால் காரியமா மென்பதிற் சந்தேகம் வேண்டுவதின்றும். அது சிருட்டிகால ஆதியினுள்ளதாய் ஆன்மாக்களைப் பற்றியதன்றி, அநாதியினுளதாய்ப்பற்றிய தாகாது. இதனை யியற்றுங் கிரியாசத்தி ஆன்மாவின் கன்ம சமத்துவ மலபரிபாக காலத்தில் ஆகாமிய சஞ்சிதங்களை இல்லையா யழித்து அருள் நிலையில் நிறுத்தி, தனது கிருத்தியத்தையும் விட்டு நீங்கா திருக்கு மாதலால் என்று முள்ளதாய், ஆன்மாவிற்கு எங்ஙனம் மலம் அநாதியோ அங்ஙனமே சிவபெருமானுக்கும் இவை சகசமாகவு மிருப்ப தாகலின், இப் பஞ்ச கிருத்தி யங்களும் அநாதியே யுள்ளதென்பதே சித்தாந்தமாகும்.

இனி மூவகை யான்மாக்களாந் தன்மை ஆன்மவர்க்கத்தின் பக்குவ பேதமேயாகும். அஃதாவது ஆன்ம வியற்கை சார்ந்த தன் வண்ணமாந் தன்மையடங்கிய சதசத்தென்னும் நாமத்தை யுடையவாய், வியஞ்சகமின்றித் தானே யுணருந் திறமடையாத தூல சித்தாகி அசத்தோடு கூடி அசத்தாதலும் சத்தோடு கூடிச் சத்தாதலுமாகிய ஈரிடத்தன்றித் தனித்து வேறாய்க் காணப்படாத வியல்பு தனக்கே சுபாவமாக உடையதேயாம். ஆன்ம சத்த முள்ளன யாவும் அநாதியே ஞானக்கிரியை விளங்காது மூடமாய்க் கிடந்தன வென்பது ஒருதலையாக, அவ்வாறு பரதந்திர வுணர்வினவாய அவைகள் சுதந்தர வுணர்வின்றி மலத்தோடு பிரிபடாது கிடத்தலால் அநாதியே சிவமென்னும் வஸ்து ஒன்றே மலரகித முடைத்தென்க. அங்ஙனஞ் சிவம் தனது கருணையால் மலசகசமாக் கிடந்த சீவர்களின் அறிவு, செயலை விளக்கும் பொருட்டுப் பஞ்சகிருத்திய முறையினாலே மாயா காரிய தனுகரண புவனாதிகளை யாக்கி அக்கரணங்களின் வழியாய் அறிவு வெளிவர, ஐந்தக்கரஞ் சேர்ந்த சமட்டிப் பிரணவசுத்த மாயா சபை யிலே பஞ்சகர்த் தவ்விய பிரேரகத்தால், ஒருபுடை யொதுங்கித் தோன்றும்படி செய்யுஞ் சகலநிலையைக் கொடுத்து, ஆன்மாவாகிய

வன்றுவை வெருகப் பிரித்துக் காட்டும் அந்நிலையில் ஒரு மலத்தினை
ராய் மூடத்திற் கிடந்த வறியாமையாற் றேடியகன்மவிரு மலத்தினை
ராய், அசனைப் புசிப்பிக்கும் வைத்தியசிவனாற் கொடுக்கப்பட்ட மா
யாகாரியமா யுள்ள முப்பத்தொரு கருவிகளோடு கூடிய மும்மல சக
லரெனப் படுவார். அதனாற் சிசைத்த முளதாம். ஆகலால் இறந்த
உயிரை எழுப்பும் அமிர்த சஞ்சீவி போலச் சடத்துவமாய்க் கிடந்த
சீவர்களை யெழுப்பிக் கன்ம பலன்களையூட்டி மலபரிபாகப் படுத்தும்
ஔடதமாகிய இச்சகல நிலையே அம்மருந்தின் பத்திய வேதாகமக்
கட்டளைகளை யுணர்ந்து சாதனஞ்செய்து பக்குவமடையவும், அப்பக்
குவ பேதங்களுக்குத் தக்க போகமுத்தி அதிகாரமுத்தி பதமுத்தி
சிவன்முத்தி பரமுத்தி யென்னும் ஐவகை முத்திகட்கும் முக்கியகா
ரண வேறுவா யிருப்ப தவ்வொன்றே யாம். ஆன்மாத் தன்னுடன்
கூடிச் சகலனென்று பெயர் அடைதற் கேதுவாய கலையுடனே, வித்
தை ராகம் என்னும் வித்தியா தத்துவங்களால் விளங்கிய இச்சா ஞா
னக் கிரியைகள் விரிந்த விஞ்ஞானந்தான் கலைமுதல் முப்பத்தொரு
தத்துவங்களையும் வேறுபக்கண்டு விடுதலைப்பட்ட விஞ்ஞானகல பிர
ளயாகலர், அம்மாயாகலை நீங்கிய போதும் ஆன்ம சத்த மின்றிக்
கேவல வுள்ளுணர்வி னராய்க் கிடந்தாரே யாக இவர்களிற் சிலர் பக்
குவ முதிர் வினாற் சுத்தகாரியகலை முதல் முப்பது கருவிகளோடு
கூடி அதிகார பதமுத்தி யடைந்திருப்பாரென ஆப்தவாக்கியங்
களிற் பேசப்படுதலால், இவர் கேவல சகலமென்னும் ஈரவத்தையுங்
கடந்து, சுத்தாவத்தையின் கீழ் நிலையான கலையோடுகூடினா ரென்
பது காணப்படுதலால், கலைசேராத சீவர்கள் ஞானக்கிரியைகள்
விளங்கிப் பாகமடைய மாட்டாரென்பது கல்லெழுத்துப் போல
மாறாத நிச்சயமாய் யாவரும் விளங்கத்தக்க உறுதிப் பொருளே யா
கும். அவ்வாறு காணப்படுதலால் அநேகராகிய சீவர்கள் யாவரும்
பொதுவே மல மூடத்திற் கிடந்தவராக, சிவனாற் கொடுக்கப்படுங்
கலையோடு கூடிய வறிவினாற் பயின்ற சாதன பக்குவத்தால் முற்கூ
டிய கலையினீங்க, தனதருளாகிய சுத்தகலையோடு கூட்டிப் புடமி
ட்டு அதிபக்குவராக்கி அச்சுத்த கலையையுங் கழற்றி, சிவஞான அக
ண்ட நிலையில் வைத்துத் தன்னோடு சேரவணைத்து நித்தியானந்த
மூட்டுவிக்கு சற்காரிய சித்தாந்தமாகப் பேசப்படுதலால் இச்சீவர்
களின் விஞ்ஞானகல பிரளயகல சகலமாகிய மூவகைப் பிரிவுங்
காரணப் பொருளாகாமே பக்குவபேத காரியப் பொருளே யாமெ
ன்பது திடசித்தமாய்த் தெளிந்த நிச்சயமாகும். ஆதலால் வேத

ஆகமங்கள் அறுதியிட்டுக் கூறியவஸ்து மூன்றுமே அநாதி காரண மாகுமன்றி, முற்பேசிய வறுவகைப் பொருள்களும் அநாதி காரணமாகாது பிரவாகாநாதியா மென்பதே சித்தாந்த மாகும்.

இன்னும் வஸ்து வென்று பேசப்பட்டன வெவைவயோ அவையின் சொரூப வியற்கை சுபாவகுணங் குறிகளின் இலக்கணங்களை யெல்லாம் பசுபாச ஞானங்களாற் காணுது மெய்யுதி யென்றுஞ் சிவஞானத்தால் உள்ளவாறு கண்டு, அநாதி யாதிகளையும், காரண காரியங்களையும் நிச்சயஞ் செய்தல் வேண்டும். அவற்றை யொருவாறாய்ச் சிந்தித்து நோக்கும் போது, வேதாகமங்கள் சூக்கும ஞான சித்தாகிய சிவம் ஆன்மா வென்னும் இரண்டுமே ஞானக்கிரியை யோடியைபுறும் வஸ்துக்களாக அறுதியிட்டுக்கூறின. அவற்றுள் ஞானசித்தாகிய ஆன்மா என்னுஞ் சொற்பிரிவை யுற்று நோக்கும் போது வியஞ்ச கத்தா வுணருந் திறமுடைய ஞான வுருவ மறைபட்டஞான வியாபக முடையது இவ்வான்மாவும், மறைபடாது நிறைக்கும் அகண்டஞான வியாபக சூக்கும சித்தாயுடையது சிவமு மெனவே பிரித்துக் காணக் கிடக்கின்றன. இவற்றோடு அவ்வுயிர் ஞானத்தின் சுதந்தர ஈனத்தையும் மலமாகச் சேர்த்து, சடமாகிய சத்தின் நீக்குதற்கு சிவ சத்தென்றார் எனவும் அப்பசு பாசமிரண்டும், அங்ஙனம் அறியப்படும் பொதுவியல்பு பற்றி அசத்தெனப் படு மாயினும், அற்றின் சிறப்பியல்பு நோக்கும்வழி அவை சத்தாதற்கு இழுக்கின்மையு முணர்க என்னும் ஆப்த வாக்கியத்தின்படி உள்பொருளாக நிறுத்தி வஸ்து மூன்றுகச் சேர்த்து நிச்சயிக்கப்பட்டன. அவ்வஸ்து மூன்றுமே அநாதி காரணமாகுமன்றி வேறு நிலை வஸ்துக்கள் யாது மில்லை யென்பதை நேரேகாணுதற்காக அநேகாயிரம் ஏது பிரமாணங்கள் தேடி அடிதலை தெரியாது அவத்தைப் படுதல் வீணாகமுடியும். அதனை ஒரே ஒரு ஏதுவின் பிரமாணத்தைக்கொண்டு நோக்கக் குறித்து நிச்சயம் பண்ணலாம். அது யாதெனஆராய்ந்து பார்க்கில் அநாதி நித்திய வஸ்துக்கள் எவையோ அவை என்றும் ஒரு தன்மையவாய் அழியாது நித்தியமா யிருத்தல் வேண்டும். அவ்வாறாக இங்கே பேசப்பட்ட வஸ்து மூன்றனுள் சாதன அதிகாரியான ஆன்மா தான், அன்றே பற்றிய மலதடத்த நிலையினின்றும் விடுபடுஞ் சாதன வலியினால் இருவினையுந் துலை பொத்து மலபரி பாகமான சமயத்திற் சத்திபதிதலால் அதினின்றும் விடுபட்டுச் சொரூபநிலை யடைந்த போதே சிவ மெனத் தானென வேறின்றி அத்துவிதானந்த அனுபவம் பெற்ற பரமுத்திக்

காலத்தும் தன்னை முன்னமே மூடியிருந்த சுதந்தர வீனமான மல
மும் தன்னுள் ஆனந்தானுபவ காரணமாய் அடங்கியிருப்பத், தன்
மூதல் கெடாது தானும் சதா நித்தியமாயிருந்தது. ஆகவே இவ்வ
ஸ்து மூன்றும் கடலும் நீரும் உப்பும் போல அன்றே உள்ளபடி
என்றும் உள் பொருளாய் விளங்கா நிற்கும். ஆதலால் இவ்வோர்
எதுப் பிரமாணத்தைக் கொண்டே வஸ்து ஒன்றோ மூன்றோ ஆறோ
எத்தனை என்பதை இலகுவாக நிச்சயித்துக் காணலாம். ஆதலால்
இச்சங் கிரகத்தில் முன்னமே எடுத்துக் காட்டிய கன்மம், மாயை,
மாமாயை, திரோதாயி, பஞ்ச கிருத்தியம் மூவகை ஆன்மா ஆகிய
இவ் வறுவகையும் அநாதி நிலை வஸ்துக்களின் தடத்த காரியப்
பகுதியன வாகலால், அவற்றின் சொரூப நிலையான முத்திக்கா
லத்தில் இவ்வாறு பொருள்களும் அவ் வான்மாவிற்கு உளவாக
எந்த நூலிலாவது பொது சிறப்புகளாந் தொகை வகையாகிய
எவ்வாற்றானும் பேசக் காணாமையால் இவ்வாறு வகைப் பொருள்க
ளையும் பிரவாகாநிதிப் பொருள்களெனவும் முத்திக் காலத்திலும்
நிலைத்து நின்ற வஸ்துக்கள் மூன்றுமே காரணப் பொருளாய் அநா
தியிலுள்ளன எனவும் ஊகித்துணருதல் கடனாகும். இவ்வந்தரங்க
ரகசியங் காணுதற்கு இச்சுட்டறிவின் வேறாய் மேலறிவுக் கண்ணொ
ன்று திறக்கப்படவேண்டும். அதுவே வஸ்துக்களின் சொரூப நிலை
யைக் காணத் தக்கதாம். அந்நிலையைக் காணாத நாள் எந்நாளோ
அந்நாள் வரைக்கும் வஸ்துக்களின் நிச்சயம் காணுதலும் பேசுத
லுங் கூடாவாம்.

சன்மார்க்கஞ் சகலகலை புராணவேத சாத்திரங்க டாம்பலவு முணர்ந்து
வேறாய்-பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பதிபசுபா சந்தெரித்து
ப் பரசிவனைக் காட்டும்-நன்மார்க்க ஞானத்தை நாடிஞான ஞேயமொடு ஞா
துருவு நாடாவண்ணம்-பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றிஞானப் பெருமையு
டையோர்சிவனைப் பெறுவர் காணே.

என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருவாக்கைச் சிந்தித்துச் சிவ
ஞானச் செல்வப் பெரும் பேறடைந்து கடைத்தேறுதும். இனிப்ப
தார்த்தங்களுள் அநாதி நித்தியமாகவுள்ள பதிபசுபாசங்களின் சி
றப்பிலக்கணஞ் சொல்லுவாம்.

## முதலாவது

## பதார்த்த நிச்சயம் முற்றிற்று.

## இரண்டாவது

# பதியிலக்கணம்.



### சிவஞானபோத முதற் சுலோகம்.

ஸ்திரீபும் நபுஞ்சகா திக்வாஜ் ஜகத:கார்யதர்சநாத்
அஸ்திகர்த்தா ஸக்ருத்வை தத்ஸ்ருஜத்தி யஸ்மாத் ப்ரபூர்ஹர:

### சிவஞானபோதம்.

அவனவ ளதுவெனு மவை மூவினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

"சிவம்சகத்குரு சர்வஞ்ஞத்துவ சங்காரமே முதல்" எனச் சிவஞானபோதங் கூறிற்று. அது ஆகுபெயராய் * உருத்திரமூர்த்தி ஒருவரையே உணர்த்தி நிற்கும். சுட்டுணர் வாகிய பிரபஞ்சம் சுட்டுணர் வின்றிநின்றஉருத்திரன் வசத்ததாய்ச் சுதந்தர மின்றிநிற்கும். அச் சிவன் தனதருட் சத்தியாகிய சுவரிலே பிரபஞ்சமாகிய சித்திரத்தைத் தீட்டுவார். அவரே அதனை அழித்தலும் செய்வார் என்பது துணிபு. அதனால், சகத் கர்த்தா அவர் ஒருவரேயாகும். மற்றொருவரு மில்லை யென்பது முடிபு. இனி அச்சிவசத்தியாகிய சுவரில் எழுதிய சித்திரம் என்று கூறவே, அச்சிவமே நிமித்தோபாதானம் என்னும் ஆட்சேபம் உளதாம். ஆயினும் சடமாகிய சித்திரம் சித்தாகிய சிவத்தினின்றுந் தோற்றுமென்பது காரணகாரிய தருக்க முகத்தினாற்பெறப்படலான் சித்தாகிய சிவம் நிமித்த காரண மாவதன்றி முதற்காரண மன்றென்க. சித்திரகாரனாகிய சிவனும் அச்சித்திரம் அமைதற்கிடமான சுவராகிய சத்தியும், சடமாகிய சித்திரமும் வேறுயுளவென்பது பிரத்தியக்ஷத்தாற் காணக் கிடக்கின்றன. இனி, உலக மா

---

* ஈண்டு உருத்திரன் என்றது பிரம விட்டுணுக்களோடு குண தத்துவத்திலிருந்து அழித்தற் றொழில் செய்யும் குணருத்திர ரன்று. என்னை? அவர் பிருதிவி முதற் பிரகிருதி புவனம் வரையுஞ் சங்கரிப் பரன்றி, யதற்கு மேற்பட்ட புவனங்களுக்குச் சங்கார காரணராகா மையின். எனவே யீண்டைய வுருத்திரர் சுத்தமாயா புவனாந்தம் வரையுஞ் சங்கரிக்கும் மகாருத்திரர் எனறு அறிக.

ாது பராபிரகிருதி,பிரகிருதி என்னும் மூன்றுக்காரணங்களால் சுத்தப் பிரபஞ்சம், அசுத்தப் பிரபஞ்சம் என இரண்டாகக் காரியப்படும். அவ்விரு வகைப் பிரபஞ்சங்களும், பராசத்தியாகிய பெருஞ்சமுத்திரத்தினீர்க்குமிழி போல விளங்கும். அது சுத்த காரணத்தினின்றும் அசுத்த காரியம் தோற்றுதென்னுந் தருக்க முகத்தால் பராபிரகிருதி சுத்தகாரணமும், பிரகிருதி அசுத்த காரணமுமாகும். இவற்றுள் மலசகித கன்ம சீவர்களின் மலநோயைக் கழற்றும் வைத்தியமென் தனுகரண புவன போகங்களின் உட்கருவி புறக்கருவிகளாகிய தொண்ணூற்றாறினுக்கும் முதற்காரணமாக அம்மலத்தினின்றுந் திரித்தெடுத்துக் கொண்ட பரிக்கிரக சத்தியாகிய அசுத்தமாயையானது மூவகைப் பட்ட சீவர்களினுடைய தூலசூக்கும காரணமாகிய மூவகை வடிவங்களுக்கும் முதற் காரணமாகும். இனி, பராபிரகிருதி மல கன்மங்களோடு விரவாது சுத்த அகண்ட வெறுவெளியாதலின் சிதாகாசம் என்று சொல்லப்படும்; இப்பொருளடங்க இன்னும் அநேக நாமங்களுளவாம். இதுசத்திகாரிய சுத்தப் பிரபஞ்சங்களின் முதற் காரணமாகும். சிவசத்தியும் அபின்னசிற்சத்தி, பின்னசடசத்தி, யென இருவகைப்படும். அதனால் அச்சடசத்தி சுத்தப் பிரபஞ்ச முதற் காரணமாகவும், சிற்சத்தி அதற்கு ஆதார சமுத்திரம் அல்லது பித்திகையாகவும், சிவன் அவற்றை ஆக்கிய நிமித்தகாரண கருத்தனாகவும் காணப்படும். இதனை "நிச்சக்ரிபித்தி நிர்மிதசகத்" என்னும் வியாசசூத்திரத் தாலுணர்ந்து. சிவன் தானே சத்தியாகிய சுவரில் பிரபஞ்சங்களைத் தோற்றுவித்தாரென்பது துணிபொருளாக நிச்சயித்தறியலாம். அதனால் பிரம விட்டுணு முதலிய காரணகருத்தர் படைத்தல் காத்தலாகிய கிருத்தியங்களைச் செய்யும் சுவதந்திர ரல்லரென்பது தானே வெளிவரக் கிடக்கின்றது. ஆகவே அவ்விருவரும் தங்கள் தனு கரண புவன போகங்களை அப்பிரமத்தின் பஞ்ச கிருத்தியத்தால் பெற்றுக் கொண்டார் என்பதுங் கருத்தாகும். இனி, தனிமுதலாகிய பிரமத்தைக் காரணரெனக் கூறிய இருக்கு முதலிய வேதங்கள் பரதந்திர சீவர்களாகிய பிரமன், விட்டுணு இந்திரன், அக்கினி சூரியன் முதலிய சீவர்களுக்கு முகமனும், அவரிடத்து நின்று அவ்வத்தொழில்களை நடத்தும் பிரமம் ஒருவருக்கே உண்மையாதல் அவ்வேத உள்ளிடையிற் கிடந்த சித்தாந்த மாகும். ஆதலால் இப்பிரமா வாதியர் சீவர்களாகவும் இவர்முதற் றாவரமீறாகிய சீவர்களுக் கெல்லாம் சங்கார காரணராகிய உருத்திர மூர்த்தி தானே ஒருவராய்நின்று கரணத்தானன்

றிச் சங்கற்ப மாத்திரையாய்ப் பஞ்ச கிருத்தியங்களையும் நடத்துவா ரென்பதூம், பெறப்பட்டது. இனி அப்பிரமன் முதலியோர் செய்த தவ வரப்பிரசாதத்தால் அம்முத்தொழிற் றலைமையைப் பெற் றாரெனில், அத்தொழில்களைச் சிவசத்திதம்மிடத்து நின்று நடா த்தும் பெருமை ஒன்றையே பெற்றுக் கொண்டதன்றி அக்கிருத் திய அதிகாரம் பெற்றவ ரல்லர். மலத்தோடு கூடி நின்று காமிய தவஞ் செய்தவராகலின். இனி, அம்மலத்தினின்றும் விடுபட்டு, சிவமாந் தன்மையைப் பெற்ற சீவன்முத்தரும் தங்கள் சுதந்தர காலியாகிய பேரின்ப மொன்றினுக்கே உரித்துடைய ரன்றிப் பஞ்சகிருத்திய தலைமைக்குரிய ரல்லரெனவே இவர் செயலைப் பேச வேண்டிய தென்.? இருணீங்கிய வழியும் கண் காட்சி ஒளியையின் றிய மையாதவாறுபோல, மலம் நீங்கிய முத்திநிலை யினும் அறிவு முதல்வனது வியஞ்சகத்தை யின்றியமையா தெனவும்,, விரும்பிப் பொன்னினைக் குளிகை ஒளிப்பது போலடக்கிமேழித்துத் தானெ லொம் வேதிப்பானுகி.,, எனவும். "எவ்விடத்து மிறையடியை யின் றியமைந்தொன்றை அறிந்தியற்றியிடா வுயிர்கள்,, எனவும் சிவஞா ன சித்தியார் கூறுமாற்றால் தம்முணர்ச்சிக டாமும் சுதந்தரமின்றி வியஞ்சக உணர்வுடையராயினோர் பஞ்சகிருத்திய உரிமை உடை யராதல் எவ்விதம்? இன்னும்-அவ் வரி பிரமன் முதற்சீவர்கள் யா வரும் அநாதியே மலசகிதராக, அப்போதே மலர கிதராகிய பரம பதி ஒருவராலே, சூக்கும தூல அதிசூக்கும பஞ்சகிருத்தியத் தினாலேயே அறிதற் பயனடைவார். அன்றேற் சடம்போ லறி விலராம். எனவே, அவ்விருவரும் அப்பஞ்ச கிருத்தியத்தால் வந்த அறிவைப் பெற்றுடையார் தாமே. இவர் அம்மலத்தினின்றும் கழற் றுதலாகிய கிருத்திய கருத்தாவ தெவ்வாறு? ஆகவே. மூவர்முத் தொழில்செய்வர். ஐவர் ஐந்தொழில்செய்வர் எனமுன் பின் அடி தலை தெரியாது மலைவுபடக்கூறுதல் மூரணமென்க. இன்னும் சீவர் கள் அநேகர். பதி ஏகன். அப்பதிக்கே பஞ்சகிருத்திய முடைய து. மலசகித சீவர்கள், அப்ப ஞ்ச கிருத்தியப்படுதலை யுடைய பர தந்திரரேயாகும். அவ்வாறாகவே ஒருபொருளுக் குரிய பன்னாமங்கள் போலன்றி நாமே பிரமம் அவர் தாமே பிரமம் எனஇருபெயரைக் கொண்ட பிரம விட்டுணுக்கள் தனித்தனி என்ன தொழிலைச் செய்ய மாட்டுவர். குருடன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்டுவதை யொ க்கும். ஆதலால் இவ் விருவருக்கும் பஞ்சகிருத்திய சுதந்தரம் இல்லையே இல்லை. இனிக் கீழுள்ள பிரகிருதிதூல புவனங்களின்

கிருத்திய கருத்த ராவரெனில் இச்சீவர்கள் தேடிய கன்மம் நுக ருவித்தற் பொருட்டு உடலின் மூன்றும் உயிரின் இரண்டுமாக நடை பெறும் பஞ்ச கிருத்தியத்துள் உயிரோடுசேர்ந்த இரண்டும் நீக்கி, தனுகரண புவனங்களிலேயே முத்தொழிற்படுதலும், அண்ட புவ னங்களைப்போலப் பிண்ட தனுவும் உட்கருவிபுறக்கருவி யாகிய தொ ண்ணூற்றாறினுள் புறக்கருவி அறுபதும் நீக்கி, உட்கருவி முப்பத் தொன்றும், பிரேரக கருவி ஐந்துஞ் சேர, ஆன்ம வித்தியா சிவதத் துவங்களென மூவகைவப் பட்டுக் கீழுள்ளவிடயப் பயனாகிய இன்ப துன்ப நுகர்ச்சி ஒன்றி னொன்று பற்றுதலாய், ஆன்மாவின் இச்சா ஞானக் கிரியைகளின் அடையப் படுதலும், அவ்வின்ப துன்ப நுக ர்ச்சியி னெல்லையாகிய இருவினை ஒப்பிற் பிரகிருதி முதற் கீழுள்ள கரண இந்திரிய பூத விடயங்களும், மேனுள்ள கலாதிகளும், சிவ தத்துவத்தை அருட்சத்தி பிரேரிக்காதுவிட அவைதொன்றினாலேயே ஊனைக் கருவிகளும் ஒருசேர அழிதலும், பேசப்பட்ட இடங்க ளினெல்லாம் இவ் விருவருடைய தொழில்கள் யாதுங் காணப்படா மையாலும், ஆன்மாக்களின் எய்ப் பினைப்பாற்றும்சர்வ சங்கார கா லத்தும் பிரகிருதி, மாயை, மாமாயை ஆகிய மூவகைத் தத்துவ புவ னங்களோடு விட்டுணு பிரமனாதி சீவர்கள் யாரையும் முன்னமே யா க்கிய கருத்த னொருவனே சொற்பொருட் பிரபஞ்ச விரிவையும் ஒடு க்கிச் சர்வ புவன சங்காரஞ் செய்தல் பேசப்படலாலும், இவ்வி ருவரும் இவைகளுள் ஒன்றையேனும் அறிந்தவருஞ் செய்தவரு மல் லர். ஒருவன் ஏவல் வழித், தேர் செய்வார் பலரும்அத்தொழிற்குக் கர்த்தர்களாமாறு போல இவர்களும் இயற்றுதற் கருத்தர்களேயா ம். ஆகவே இவைபோன்ற அநேக பொருள்களை யுள்ளடக்கிய பிர பஞ்ச கிருத்தியம் மிகப் பெருந்தொழி லானமையற்றி இதனை ஆக்கி நிறுத்தி அழிக்கும் கருத்தாகிய சிவன் தொழில் செய்யும் தவமு டைய ராகிய இவரைக் கொண்டு தன தேவலின்படி சில தொழில் களைச் செய்விப்பார். அதனால் இவர் முத்தொழிற் கருத்த ராகார் ஆதலால் இவர் கீழ்நிலையிற் பிரகிருதி புவனங்களிற் றானும் கிருத் திய கருத்த ராகார் என்பதே சூற்காரிய சித்தாந்த மாகத்தெளிந்து கொள்ளத் தக்கது.

இது "விரைக் கமலத் தோன்மாலும் ஏவலால் மேவி னார்கள்— புரைத் ததிகார சத்தி புண்ணிய நண்ணலாலே" என்னும் பிர மாணத்தால் நிச்சயித் துணரக் கிடக்கின்றது. இனி இச்செய்யுளின் உண்மைப்பொருள் கண்டுணரா ரோர்சிலர், பிரம விட்டுணுருத்திரர்

ஆகிய மூவரையும் ஒருங்குவைத்துச் சிவபக்குவபேத மூவகையில் ஒரு மலத்தராய விஞ்ஞானகலரில் மலபரிபாகபக்குவராய், அபர முத்த சிவங்களாம் நிலைமைபெற்ற அநுசதாசிவ அட்டவித்தியேசுரரிற் றலைமை பெற்றவ ரான அனந்தேசுரர் அப்பிரமத்தின் ஏவுதலைக் கொண்டு அசுத்த மாயையைக் கலக்கி, வித்தியாதத்துவ புவன பஞ்ச கிருத்திய இயற்றுதற் கருத்தாவா யிருப்பரெனவும், அவரினும் கீழ்நிலையரான பிரளயாகலரின் மலபரிபாக பக்குவராய் அபர முத்த உருத்திரரிற் றலைமை பெற்ற ஸ்ரீகண்ட ருத்திரர் அவ் வனந்தேசுரரது ஏவலைக் கொண்டு, பிரகிருதியின் கீழுள்ள தூல அண்ட புவனங்களாகிய சுவர்க்க மத்திய பாதல மென்னும் முச்சகத்து ளடங்கிய பதினான்கு உலகங்களில் வசிக்கும் சகல ராகிய தேவர் மனிதர் முதலிய சீவர்கட் கெல்லாம் சகலானுக் கிரகஞ்செய்யும்படி திருக்கயிலாச பருப்பதத்தில் வீற்றிருப்பா ரெனவும், தமிழ் வேத கருத்தரான மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தர் முதலிய நாயன் மாரும், மற்றைய பக்குவ சீவர்களும் அவராணையி னுட்பட்ட சகலரிற் பக்குவரும் பரசாயுச்சியம் பெறுதற் குரித்துடையரல்லர். ஆதலின் இப்பிரகிருதிப் பதமுத்தியையே இப்பிரளயாகல ருத்திரர் கொடுக்கப் பெற்றுக் கொண்டா ரெனவும், இன்னும் பலபடக் கூறிமயக்குவர். அவரறிவுக்கு யாம் என்சொல்லி விளக்குவேம். ஆயினும் இனிமேல் முத்திவேறில்லாது முடிந்த பரசாயுச்சிய முத்தியைப் பெற்ற சிவஞானிகள் தாமும் அம்முத்திக்காலத்தும் சுதந்தர வீனரா யிருப்பாராயின், இப்பிரள யாகல ஸ்ரீகண்ட ருத்திரர் மற்றைய சீவருக்கு முத்தி கொடுத்தாரென்பது மிகவு மதிசயம். அதுநிற்க அரிபிரமாதி கிருத்திய கருத்தராலும் அடி முடி தேடி அறிதற் கரிய சச்சிதானந்த சொரூப நிலையில் நின்ற சிவன் தனது திருவருளை ஓர் பெண்ணுருவாக்கித் தானுஞ் சத்தி காரிய திருவுருவங் கொண்டு, பதிபாதந் திரீய சாமானிய சீவர்களுக்கும், அவர்களுள் தம்மை உள்ளபடி உணர்ந்து பற்றிய சிவசுவ தந்திரீய தன்மையுடையவர் களுக்கும் அவரவர்க் கேற்ற அருள் புரிதல் காரணமாக அருள் நிலைத்தானமாகிய சிவஸ்தலங்கள் ஆயிரத்தெட்டினும் முக்கிய ஸ்தானமாகிய * திருக்கயிலாசபருப்பதத்

---

* கயிலாயம் இருவகைப்படும், ஈண்டுக் கூறப்பட்ட கயிலை பூகயிலை யல்லாத மற்றையது ஆண்டுத் தான் இறைவன் யோகிருப்பதும், திருவோலக்கங் கொண்டிருப்பதும், ஆமர்த்தக முதலிய ஆதிசைவத் திருமடங்களும், சிந்தாமணி, பாதாஞ்சன முதலிய பிரபல சித்திப்பொருள்க ளிருப்பதும் ஆகுமென்று மதங்காகமம் கூறுகின்றது.

தில் அவ்வருட் பெண்ணாகிய உமா சமேதராய்த் தாமாகவே எழுந்தருளி விற்றிருந் தருளுவர் என்பதையும், அக்கைலாசம் தத்துவாதீத அருள் நிலைத்தானம் என்பதையும், நம் போலிய அறிவீனசிவர்கள் உணர்ந்து உய்யும் பொருட்டு மூவரின் முதல்வரான அப்பர் சுவாமிகள் நேரே கைலாச தரிசனம் செய்ய விரும்பி நடந்ததனால், கால்தேய்ந்து உருண்டு புரண்டு அங்கம் தேய்ந்தவ ராகியும் அங்குச்செல்லற்கருமையாய்த் திருப்பித் திருவையாற்றில்வந்து அக்கைலாச தரிசனத்தைப் பெற்ற செயலால் உணர்த்தினர். ஆனால் இருவினை யொத்து மலபரிபாக சத்திநிபாதம் பெற்றுச்சிவ ஞானக் கடலில் முழுகிய அப்பர் சுவாமிகள் தாமும் அவ்வுடலோடு பொருந்திய கண்களால் தத்துவா தீத அருள் நிலைத்தான மாகிய அக்கைலாச தரிசனஞ் செய்தல் கூடாதெனச் சரித்திரங் களிற் கூறப்பட்டபடி, அக்கைலாயம் சிவ தடத்த நிலைவடிவங்களைக் கொண்டுசெய்யும் பஞ்ச கிருத்திய விடுதலை உடையராய்த் தற்போத மின்றி, தம் ஞானக் கிரியை சிவஞானக் கிரியையினுள்ளடங்கி ஏகிபவித்து நிற்கும் சீவன் முத்த நிலைமுழுதாக் கைவரப் பெற்ற வாகீசப்பெருமானுங் கிட்டுதற் கரியதாய் இருத்தலால் சிவசொரூப நிலையினுள்ள அத்தானம் எல்லைக் கடங்காத மேனிலையினுள்ள தென்பதைச் சிவஞான நெறியாகிய சித்தாந்தங்களிற் பயின்ற பெரியோர்களே சிந்தித் துணர்வார்.

இன்னும் முன்னரே பேசப்பட்ட பிரளயாகல சீகண்டர் இருபத்துநான்காந் தத்துவமாகிய குணநிலையர். இவர் ஒருவாறு பரிபாகப்பட்டா ராயினும் இதன் மேலுள்ள வித்தியா தத்துவங்களுக்கு அடுத்தபடியாம் பிரகிருதி தத்துவ நிலையரானர் எனவும்வைத்து ஆராயினும்,இருபத்துமூன்றும்இருபத்துநான்காம் தத்துவநிலையரன்றோ? அவ்வாறு மேற்புவன வாசியாயிருந்து முன்னரேயுள்ள மாயை கன்மங்க ளோடு கூடிய இரு வினைத் தொடக்கில்லா ராயினு மல பரி பாக மாகிய அக் கன்மானு பவ முடைய ராய் நெடுங் காலம் அதி கார மலத் தோடு கூடி அனு பவித் திருந்த பின்னர்ப் பெரும் பாலும் பூமியிற் சென் மித்துத் தீட்சா வல்லபத் தால் நால்வகைச் சத்திநிபாதம் பெறு முரிமை யுடைய ராதலின் இப் பிரள யாகலருடைய பரி பாக நிலையையும், அவ் வப்ப சுவாமி யுடைய பக்குவ நிலையையும், அதனால் அத்துவி தானந்த அனு பவத்தை அளிக்கும் பரம சிவ சொரூப நிலையையும், அப் பேறு கொடுக்கத் தக்கார் யா

